தென்றல் வெளியீடு உ.

# மின்னொளி

இரண்டாம் பதிப்பு.

ப. கண்ணன்

தென்றல் நூற்பதிப்புக் கழகம்,
சலகண்டபுரம். :: சேலம் மாவட்டம்.

# பதிப்புரை.

---

"சிற்றூர்களே நாட்டின் உயிர்நாடி" என்று சொல்லுகின்றனர். ஆனால் நாட்டின் பலவீனமான பகுதிகளும் அவைகளே! கல்வியின்மை, அறியாமை, மூட நம்பிக்கை, கேடுதரும் பழக்க வழக்கங்கள் உயிர் வாழும் காட்சிசாலையாக விளங்குகின்றன சிற்றூர்கள்! கிராமச் சீர்திருத்தம் தேவையென்பது எக்கட்சியினரும் ஒப்பிய முடிபு. அவ்வகையில் ஒரு சிறிய முயற்சி இப்புத்தகம்.

எந்த ஒரு நல்ல கருத்தையும் பரப்புவதற்கு நாடகம் ஏற்ற சாதனம். ஒரு குறிக்கோள்—நீதி—படிப்பினையற்ற நாடகங்கள் வெறும் பொழுது போக்காகும். தற்காலத்தேவை அதுவன்று.

மின்னொளி முன்னேற்றக் கருத்துக்களின் அடிப்படையில் எழுந்த ஓர் சிறு நாடகம். பழமைப்பாசி படர்ந்த சிற்றூரைச் சீர்திருத்த முனைகிறார் ஓர் இளம் ஆசிரியர். அவருக்கு ஆதரவு காட்டுகிறாள் ஓர் இள நங்கை. பலத்த எதிர்ப்பு முளைக்கிறது. பழமையும் புதுமையும் முட்டி மோதிக்கொள்கின்றன. இறுதியில் அறிவும் அன்பும் வெல்கின்றன. இது கதையின் சாரம்.

மின்னொளி படிப்பதற்கும், நடிப்பதற்கும் ஏற்ற நல்ல நாடகம். சீர்திருத்தப் பணிபுரிய விரும்பும் நடிப்புக் கலைஞர்கட்கும், மாணவர்க்கும், தமிழ்ப் பெருமக்களுக்கும் மகிழ்வோடு இதைப் படைக்கின்றோம். இரண்டாம் பதிப்பாக. ஆதரவு நல்குவார்களாக.

தென்றல் நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை.

---

பாடசாலைக் கொண்டாட்டங்களில், ஆண்டு நிறைவு விழாக்களில், மாணவர்கள் நடிப்பதற்கேற்ற சீர்திருத்த நாடகம் வேண்டுமென்று எனது ஆசிரிய நண்பர்கள் பலர் கேட்டனர். நல்ல கருத்துள்ள **கிராமிய நாடகம்** எழுதுங்களென்று வானொலி நிலையத்தார் கேட்டனர். இரண்டையும் மனதில் கொண்டு எழுதினேன் இச்சிறு நாடகத்தை.

**பொன்னப்பன் மகள்** என்ற பெயரால் 17-1-1949-ல் திருச்சி வானொலி நிலையத்தில் இது நடிக்கப்பட்டது. ஒலி மூலம் **கேட்கும்** நாடகங்களுக்கும், காட்சி மூலம் **காணும்** நாடகங்களுக்கும் அமைப்பு முறையில் சற்று வேறுபாடு உண்டு. ஒலியில் நிகழ்ந்த இந்நாடகத்தில், காட்சியில் நிகழ்வதற்கு ஏற்ற வகையில் சில மாறுதல்கள் செய்துள்ளேன். முதற் காட்சிக்கும் இரண்டாம் காட்சிக்கும் இடையே சுகாதாரப் பாட்டொன்று இருக்கலாம். மேலும் சில பாட்டுக்கள் சேர்த்துக்கொண்டால், மேடையில் நடிப்பதற்கு ஏற்றதாகும். எனது இச்சிறு தொண்டினைத் தமிழகம் ஏற்கும் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

சலகண்டபுரம்,
15-11-49.

ப. கண்ணன்.

# மின்னொளி.



## நாடக உறுப்பினர்.

| | | |
|---|---|---|
| செல்லத்துரை | .... | பள்ளி ஆசிரியன். |
| பொன்னப்பர் | .... | மணியக்காரர். |
| வயிரமுத்து | .... | ஐயார் தங்கை மகன். |
| இருளன் | .... | காளிகோயில் பூசாரி. |
| மின்னொளி | .... | பொன்னப்பர் மகள். |
| சடைச்சி | .... | இருளன் மகள். |

மற்றும்

நோயாளி, வேலையாள், அரசாங்க சேவகன்,
பண்ணையாட்கள் முதலியோர்.

நிகழுமிடம் :

காரட்டுப்பட்டி, நாகரிக மணம் புகாத
ஓர் சிறு கிராமம்.



## முதற்காட்சி.

[மணியக்காரர் பொன்னப்பர் வீடு. அவர் திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலைப்பாக்கு மென்றுகொண்டிருக்கிருர். எதிரே கணக்குப் புத்தகங்கள். கையிலே "பகுத்தறிவு" இதழும், முகத்திலே ஆவலுமாக மின்னொளி தோன்றுகிருள்]

**மின்னொளி :-** அப்பா! ஏதாவது பத்திரிக்கை வரவழையுங்களேன்.

**பொன் :-** நமக்கு ஏதுக்கம்மா அதெல்லாம்? பட்டண வாசல்லே இருக்கிறவங்களுக்குத்தான் பத்திரிக்கை பார்க்கலேன்ணு தின்ன சோறு ஜீரணமாகாது!

**மின்னொளி :-** அப்படியானல் என்னை எதற்கப்பா படிக்கவைத்தீர்கள்?

**பொன் :-** ஏதோ காலெழுத்து தெரிஞ்சிருந்தா தேவலேன்னு பாத்தேன. இப்பத்தான் என்ன? நம்ம தாத்தா படிச்ச பக்தவிஜயம் இருக்குது, பாரதம் இருக்குது, கந்தபுராணம் இருக்குது எடுத்துப் படிம்மா....ரொம்ப நல்லது.

[பழைய பள்ளிக்கூடத்தின் புதிய ஆசிரிய இளைஞர் செல்லத்துரை வருகிறார்.]

**செல்ல :-** (பணிவோடு) ஐயா! வணக்கம்.

**பொன் :-** புது வாத்தியாரா? வாங்க உக்காருங்க, என்ன விசேஷம்?

செல்ல :- (உட்கார்ந்த வண்ணம்) நம்ம ஊரில் சுகாதார வாரம் கொண்டாடும்படி, அதிகாரிகள் உத்தர விட்டு இருக்கிறார்கள். செய்யவேண்டும். அதற்குத்தான் .. தங்களிடம்.......

பொன் :- அதென்னங்க சுகாதாரவாரம்? முன்னே இருந்த வாத்தியாரு சொன்னதே இல்லியே!

செல்ல :- வீடு வாசல்கள் சுத்தமாக இருக்கவேண்டியதுபற்றியும், காலரா, அம்மை, பிளேக்கு முதலிய தொத்து நோய்கள்பற்றியும், பிரசங்கம், பாட்டுக்கள் மூலமாக மக்களுக்கு வருடம் ஒரு முறை போதிப்பது. அதற்குச் "சுகாதார வாரம்" என்று பெயர்.

பொன் :- ஆமா, அதுக்கு நான் என்ன செய்யணும்?

செல்ல :- பள்ளிக்கூடத்திலே, பந்தயம், விளையாட்டு, பாட்டு, பேச்சு எல்லாம் உண்டு. நீங்கள் தலைமை வகிக்கவேண்டும். நீங்கள் தானே ஊரில் முக்கியஸ்தர்?

பொன் :- எதுக்குங்க இதெல்லாம்! என்ன பேசறது என்ன, செய்யறதுன்னே எனக்குத் தெரியாதே!

செல்ல :- எல்லாவற்றையும் நான் பார்த்துக்கொள்ளுகிறேன். நீங்கள் கூட்டத்திற்கு வந்தால் போதும்.

பொன் :- இதெல்லாம் எதுக்குங்க ஊருக்குள்ளே புது வழக்கம்?

மின்னொளி :- என்னப்பா நீங்கள் பேசுவது? இதெல்லாம் நல்ல காரியம். அவசியம் செய்யவேண்

டியது. தானுகவரும் பெருமையை வேண்டா மென்கிறீர்களே. ஒப்புக்கொள்ளுங்களப்பா.

[செல்லத்துரை, வியப்போடு பார்க்கிருன் மின்னொளியை.]

பொன் :- சரியம்மா. ஒனக்காக ஒப்புகிறேன்.

மின்னொளி :- இந்த நல்ல அறிவுத்தொண்டு செய்ய முன் வந்திருக்கிறரே உபாத்தியாயர், இவருக்காக ஒப்புக்கொள்ளுங்கள்.

செல்ல :- மகிழ்ச்சி. நாளையே ஆரம்பக் கூட்டம். அவசியம் வாருங்கள். (மின்னொளியைக் காட்டி) இவர்கள்....?

பொன் :- என் மகள்.

செல்ல :- படித்தவர்கள் போலிருக்கிறது. நல்ல மனம். இவர்களையும் அழைத்து வாருங்கள்.

பொன் :- ஆகட்டும்.

(செல்லத்துரை போகிருர்.)

## இரண்டாம் காட்சி.

[இருளன் பூசாரி வீடு. வேறு இடமின்மையால் அங்கு தங்கியிருக்கிருர் செல்லத்துரை. கட்டில்மேல் உட்கார்ந்து புத்தகம் படித்துக்கொண்டிருக்கிருர். கோயில் பூசை முடித்து இருளன் வருகிருன்.]

இருளன் :- வாத்தியாரே! இன்னும் சாப்பிடலையா?

செல்ல :- இனிமேல்தான். சடைச்சி தண்ணீர் கொண்டுவரப் போயிருக்கிறது....அதோ வந்தாயிற்று. வாருங்களேன் சாப்பிடலாம்.

இருளன் :- பரவாயில்லை, இப்பத்தான் கோயில்லே ருந்து வந்தேன் கொஞ்ச நேரம் போவுட்டும். சடைச்சி! வாத்தியாருக்கு வேணுங்கிறதைக் குடு, செய்யி. நல்லவரும்மா! நம்ப ஊட்லியே இருக்கச் சொல்லிட்டேன்.

சடை :- சோறுகூட நானே ஆக்கிபுட்றேன்னு சொன்னேம்பா, வேணாங்கறாரு.

இருளன் :- ஒனக்கு எங்கெம்மா தெரியும், நாக்கு ருசியா பண்ணே! சுத்தம் சுகாதாரமா சாப்பிட்றவருச்சே.

சடை :- அதெல்லாம் எனக்குக்கூட தெரியும்பா, சொன்னாரு.

இருளன் :- இப்ப, அதுக்குள்ளே சிஷப் புள்ளே ஆயிட்டேன்னு சொல்லு!

செல்ல :- புத்திசாலிப் பெண். படித்தால் நல்ல முன்னேற்றமடையலாம். தங்கமான குணம். சடைச்சியை, என் தங்கையைவிட அதிகமாக விரும்புகிறேன். சடைச்சிக்குப் படிக்கவும், பாடவும் கற்றுக்கொடுக்கப் போகிறேன்.

இருளன் :- பொம்பளை புள்ளைக்கு சோறாக்கத் தெரிஞ்சா போதும் தம்பி, அதெல்லாம் என்னாத்துக்கு?

(இடுப்பில் குடத்தோடு, முகம் திருப்பி சமையலறைக்குப் போகிறாள் சடைச்சி. வயிரமுத்து வருகிறான்.)

வயிர :- (அலட்சியமாக) என்ன பூசாரி, எப்படி இருக்கிறே?

இருளன்:- வாப்பா வயிரமுத்து. வா! சௌக்யந்தான்.

வயிர :- (உற்றுப்பார்த்து) யாரிது? இவுருதான் புது வாத்தியார் செல்லத்துரையா?

இருளன் :- ஆமாம்பா. நீ எப்ப வந்தே?

வயிர :- இப்பத்தான் வர்றேன்.

இருளன் :- எங்கேருந்து?

வயிர :- எங்கே, என்ன, எப்போங்கிறதுதான் இவுரு அகராதியிலேயே கெடையாதே! புதுசா கேக்கிறியே பூசாரி!

இருளன் :- ஆமா; இப்படி தெல்லவாரியாவே திரிஞ்சா, ஒங்க மாமா, ஒனக்கு எப்படியப்பா பொண்ணு குடுப்பாரு?

வயிர :- பொண்ணு? ஃகும்........! அவுரு குடுக்காட்டி அவரைப் பிடிச்ச பிசாசு குடுக்குது.

இருளன் :- (செல்லத்துரையிடம்.) வாத்தியாரே! தெரியுமா? இவுரு நம்ம மணியக்காரர் பொன்னப்பரோட தங்கச்சி மவன்.

செல்ல (வியந்து) அப்படியா? மகிழ்ச்சி. வந்து நான் கைந்து வாரமாயிற்று. இதுவரை நான் பார்க்கவில்லையே இவரை!

இருளன் :- (கண்ணடித்து) இவுரு ஒரு மாதிரிங்க. ஊரிலே சரியா தங்கமாட்டாரு. சீட்டாட்டத்திலே பெரியகைவி. இவுருக்கு ராவு பகலுன்னு வித்தியாசமே கெடையாது.

வயிர :- (கடுப்பாக) பூசாரி! என்ன? மண்டை ரொம்ப கனத்துப்போச்சா? நாக்கை உள்ளே வச்சுப் பேசு. என்னைத் தெரியுமில்லே! ஆமா.

இருளன் :- தப்பா ஒண்ணுஞ் சொல்லலியே.

வயிர :- நீ ஒண்ணுமே சொல்லவேண்டாம். சும்மா இருந்தாப் போதும். நான் வர்றேன் அப்புறம்.

(வயிரமுத்து விரைப்பாகப் போகிறான். சடைச்சி வருகிறாள்.)

செல்ல :- (வியப்போடு) இவரா மின்னொளியின் கணவனாகப் போகிறார்? இவரா? உண்மையாகவா?

இருளன் :- ஆமாங்க. தங்கச்சி மகனில்லே. கொழுத்த சம்மந்தம். சடைச்சி !...

சடை :- அப்பா !

இருளன் :- சோறு போடும்மா. நேரமாச்சு.

சடை :- இதோ ஆச்சப்பா.

[உள்ளே போகிறாள் சடைச்சி.)

## மூன்றும் காட்சி.

[பொன்னப்பர் வீடு. மின்னொளி; சுகாதாரப் பாட்டொன்றை வாய்க்குள் முணகிக்கொண்டே, குத்துவிளக்கு துடைக்கிறாள். செல்லத்துரை வருகிறார்.]

மின்னொளி :- (அன்போடு) வாருங்கள்.

செல்ல :- ஐயா இருக்கிறார்களா?

மின்னொளி :- வெளியே போயிருக்கிறார். வந்துவிடுவார். உட்காருங்கள்.

செல்ல :- நான் பிறகு வருகிறேன்.

மின்னொளி :- என்ன அவ்வளவு அவசரம்? இது பள்ளிக்கூட நேரமில்லையே?

செல்ல :- இல்லை.

மின்னொளி :- உட்காருங்களேன். உங்களிடம் ஒன்று சொல்ல நினைத்தேன்.

செல்ல :- என்ன?

மின்னொளி :- மக்களுக்கு உழைக்கவேண்டும், கிராம முன்னேற்றத்திற்குப் பணிபுரிய வேண்டும், என்ற பொதுநல உணர்ச்சி, உங்களிடம் பொருந்தியிருக்கிறது.

செல்ல :- (புன்னகையோடு) அப்படியொன்றுமில்லையே!

மின்னொளி :- 'அறிவை வளர்ப்பது ஆசிரியர் கடமை' என்பதோடு, ஊருக்குழைக்கும் உத்தமப் பண்பையும் பெற்றிருக்கிறீர்கள். இதை எல்லோரிடமும் காணமுடியாது.

செல்ல :- அத்தகைய பெருஞ்செயல் ஒன்றும் நான் செய்துவிடவில்லையே!

மின்னொளி :- நீங்கள் சொல்லுகிறீர்கள். இந்த ஊரில் சுகாதார வாரம் நடத்தும் துணிவு, இதுவரை எந்த ஆசிரியருக்கும் வந்ததில்லை. அவ்வளவு பயம்! அந்த ஒரு தொண்டுக்காக நான் உங்களை மனமாரப் பாராட்டுகிறேன்.

செல்ல :- ஒரு சிறிய கடமை. அதற்கா இவ்வளவு பெரிய பாராட்டு?

மின்னொளி :- ஆலம் விதை சிறியதுதான். அது முளைத்துப் பலன் தரும்போது, எவ்வளவு பெரிது?

செல்ல :- இம்மாதிரி நிலத்தில் அதை வளரவிட வேண்டுமே மற்றவர்கள்.

மின்னொளி :- விதைத்தவர் வேலி போடவேண்டும். துணிந்து செயலாற்றுங்கள். மற்றவர்கள் எப்படியோ, உங்கள் அறிவுப்பணியின் அவசியத்தை நான் உணர்கிறேன். முடிந்தவரை ஒத்துழைக்கவும் விரும்புகிறேன்.

செல்ல :- மிக்க நன்றி.

மின்னொளி :- அன்று, உங்களைக் கண்டபொழுதே.... என் உள்ளத்தில் ஏதோ ஒரு நம்பிக்கை பிறந்தது. அது நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வருகிறது.

(வயிரமுத்து வருகிறான். வெளியிலிருந்தும் அழைக்கிறான்.)

வயிர :- மின்னொளி!

மின்னொளி :- யாரது?

வயிர :- நாந்தான் அத்தை மகன் வயிரமுத்து. (உள்ளே வந்தவன் செல்லத்துரையைக் கண்டு.) ஓ! வாத்தியாரா? மின்னொளி! மாமா எங்கே?

மின்னொளி :- (வெறுப்பாக) வெளியே போயிருக்கிறார்.

வயிர :- வாத்தியாரே! தனியா இருக்கிற பொம்பளை கிட்டே ஒனக்கு என்னை பேச்சு?

செல்ல :- மணியக்காரரைப் பார்க்க வந்தேன்.

வயிர :- அவர்தான் இல்லையே. போகவேண்டியது தானே?

செல்ல :- (அஞ்சி) நான் வித்தியாசமாக ஒன்றும் பேசவில்லை ஐயா!

வயிர :- (கடுப்பாக) அது எனக்குத் தெரியாது. இந்த மாதிரி இன்னொரு தரம் பார்த்தேன், நான் பொல்லாதவன்!

செல்ல :- நல்லது, நான் வருகிறேன்.

(செல்லத்துரை போகிறான்.)

வயிர :- மின்னொளி! இது நல்லால்லே. மாமாகிட்டே சொன்னா, என்ன ஆவுந்தெரியுமா?

மின்னொளி :- ஆவதையும் போவதையும் அப்புறம் பார்த்துக்கொள்வோம். இப்போ, தனியாக இருக்கிற பெண்ணிடம் உனக்கென்ன பேச்சு? போ வெளியே!

வயிர :- என்னையா? ஒன் அத்தை மகனையா?

மின்னொளி :- ஆமாம்.

வயிர :- அப்படியா சங்கதி? உம். சரி, நான் பாத்துகிறேன்.

(கருவிக்கொண்டே போகிறான்.)

## நான்காம் காட்சி.

[இருளன் பூசாரி வீடு. உடைந்த நாற்காலியில் உட்கார்ந்து ஏதோ எழுதிக்கொண்டிருக்கிறார் செல்லத்துரை. ஒரு நோயாளி வருகிறான்.]

நோயாளி :- (இருமிக்கொண்டே) தம்பி! பூசாரி ஊட்லே இருக்கிறாருங்களா?

செல்ல :- இல்லையே, வெளியே போயிருக்கிறார். என்ன சங்கதி?

நோயாளி :- குளுரும் காய்ச்சலும் வந்து, பத்து

நாளா சொல்லுதுங்க. பூசாரி துருநீரு குடுத்தா நல்லாப் பூடுன்னுங்க. அதுக்காவத்தான் வந்தேன் கையோட ரெண்டு பணமும் கொண்டாந்தேனுங்க.

செல்ல :- ஐயா! நான் சொல்வதைக் கேட்பீரா?

நோயாளி :- நல்லதுன்னு தட்டாமெ கேப்பேனுங்க.

செல்ல :- உமக்கிருப்பது மலேரியா காய்ச்சல். இதற்குக் கைகண்ட மருந்து கொயினா. பக்கத்தூர் தபால் ஆபீசிலே கிடைக்கும். போய் வாங்கிச் சாப்பிடும், நிச்சயம் குணமாகும். ஏய்யா! மந்திரத்திலே எங்காவது மாங்காய் விழுமா?

நோயாளி :- உம்....நெசம்மாவா? நல்லா ஆகுமா? மருந்தா சாப்பிடச் சொல்றீங்க?

செல்ல :- ஆமய்யா. மருந்துதான் நோய் தீர்க்கும். மந்திரமும் மாயமுமல்ல.

நோயாளி :- நல்லதுங்க. நீங்க மகராசரா இருக்கணும்.

(இருமியவண்ணம் போகிறான்.)

## ஐந்தாம் காட்சி.

[பொன்னப்பர் வீடு. மாதம் புரட்டாசி. எனவே அலமாரி, பீரோ, பெட்டி, வாசற் கதவுகளுக்குப் பட்டை நாமம் தீட்டிக்கொண்டிருக்கிறார் பொன்னப்பர். வயிரமுத்து வருகிறான்.]

பொன் :- வாப்பா! மத்தியானம் சாப்பிட ஏன் வல்லே? எவ்வளவு நேரம் காத்திருந்தேன்? எங்கே போயிட்டே?

வயிர :- சுப்பண்ணன் தோட்டத்திலே மினியப்ப னுக்குப் பொங்கல் வச்சாங்களாம். சாப்பிடக் கூப்பிட்டாங்க, போயிருந்தேன்.

பொன் :- சொல்லவேண்டாம்? இதுதான் பொறுப் பில்லாத்தனம். எதுக்கும் ஒரு ஒழுங்குமுறை தெரியணும்ப்பா.

வயிர :- அது மொதல்லே, ஒங்க மின்னொளிக்குத் தெரியட்டும்.

பொன் :- மின்னொளி அப்படி என்னப்பா ஒழுங்கு தவறி நடந்துட்டா?

வயிர :- காலம்பர நான் இங்கே வந்தபோது, அந்த வாத்தியாருப் பயலோட கொஞ்சிக் கொஞ்சி பேசிகிட்டிருந்தாளே. இருக்கலாமா? ஒழுங்கு தானா?

பொன் :- (வியந்து) யாரு? செல்லத்துரையோடா? இருக்காதே.

வயிர :- அப்படின்னா, நான் பொய் சொல்றேனா? கூப்பிட்டுத்தான் கேளுங்களே மின்னொளியை.

பொன் :- (உரக்க) மின்னொளி! மின்னொளி!

மின்னொளி :- (உள்ளிருந்த வண்ணம்) ஏம்ப்பா! இதோ வந்தேன்.... (கூடத்திற்கு வந்து) ஏன்?

பொன் :- (கடுமையாக) காலம்பர செல்லத்துரை இங்கே வந்திருந்தானா?

மின்னொளி :- வந்திருந்தார்.

பொன் :- எதுக்கு வந்தான்?

மின்னொளி :- உங்களைப் பார்க்க.

பொன் :- காங்கான் வயலுக்குப் போயிருந்தேனே.

மின்னொளி :- அதனால் உங்களைப் பார்க்காமல் போய் விட்டார்.

பொன் :- அவனோட நீ என்ன பேசினே?

மின்னொளி :- நீங்க வெளியே போயிருப்பதாகச் சொன்னேன்.

பொன் :- அப்புறம்?

மின்னொளி :- போய்விட்டார்.

வயிர :- (குறுக்கிட்டு) இல்லே. பொய் சொல்லுது.

மின்னொளி :- அப்படியானால் அவர் போகவில்லையா?

வயிர :- நான் வந்தப்பறந்தான் போனான் எனக்கு பயந்துகிட்டு! மாமா! கல்யாணம் ஆகாத பொண்ணு, ஒரு வாலிபப் பையங்கிட்டே இப்படிப் பேசலாமா?

பொன் :- கூடாது. (கோபமாக) மின்னொளி! இனிமே அந்தப் பயகிட்டே பேசினே; தலையைத் திருகிடு வேன். ஆமா! தாயில்லாத புள்ளையாச்சேன்னு இப்போ உட்றேன். போ!

மின்னொளி :- நான் தவறாக நடந்துகொள்ளவில் லையே அப்பா.

பொன் :- தவறு. இன்னும் என்ன தவறு செய்ய ணும்? அவங்கிட்டே நீ பேசினதே தவறுதான். மரியாதையா போ உள்ளே!

(போகிறாள் மின்னொளி.)

வயிர :- மாமா! செல்லத்துரை மேலே, இவ என்

னமோ ஒரு மாதிரியா ஆசை வச்சிருக்கான்னு தெரியுது.

பொன் :- எப்படி?

வயிர :- அப்படித்தான். என்னைக் கண்டா கொஞ்சங்கூடப் பிடிக்கலையே. நாளைக்கு வாழப் போறது யாருகிட்டே?

பொன் :- இதபாரு, அதைப்பத்தி நீயேன் கவலைப் பட்டுறே? என் தங்கச்சி சாவும்போது, நான் செஞ்சி குடுத்த சத்தியத்தை மறக்கமாட்டேன். என்னைக்கிருந்தாலும் மின்னொளி ஒன்னோட பெண்டாட்டி. சந்தேகமே வேணும்ப்பா.

வயிர :- அதுதானே கேட்டேன்!

(இருளன் பூசாரி வருகிறான்.)

பொன் :- வா பூசாரி! வா! என்ன சங்கதி?

இருளன் :- என்னுங்க இப்படிக் கேக்கிறீங்க? கவனமே இல்லிங்களா? வர்ற செவ்வாக்கிழமை காளியம்மன் பண்டிகைக்கு கம்பம் போட்ற நாளாச்சுங்களே.

பொன் :- அதுக்கென்ன, வழக்கம்போலச் செய்ய வேண்டியதுதானே.

இருளன் :- என்னமோ, ஆயா காரியத்தை சிறப்பா செஞ்சம்னாதான் ஊருக்கு சேமம். மழை மாரி யாவது ஒழுங்காப் பெய்யும். ஒங்களுக்குத் தெரி யாத விஷயங்களா?

பொன் :- ஒம் மனம்போல செஞ்சிடலாம் போ!

(இருளன் போகிறான்.)

## ஆரும் காட்சி.

[இருளன் வீடு. "திருக்குறள் இசைப்பாடல்" புத்தகம் கையில் வைத்துப் பார்த்துக்கொண்டிருக்கிருள் சடைச்சி. அதிலுள்ள பாட்டொன்றைப் பாடுகிருர் செல்லத்துரை.]

சடை :- வாத்தியாரே! இது இருக்கட்டும். எங்கப்பன் ஒங்கமேலே ரொம்பக் கோவமாருக்காரே, தெரியுமா?

செல்ல :- தெரியாதே. காரணம்?

சடை :- அவுரு தொழிலைக் கெடுத்தீங்களாமே?

செல்ல :- இதென்ன விபரீதம்? அவருக்கெதிராக நான் ஒன்றும் செய்யவில்லையே!

சடை :- நீங்க மத்தவங்களுக்கு செஞ்ச நல்லது, அவுருக்குக் கெடுதலா முடிஞ்சிருந்தா?

செல்ல :- எப்படி?

சடை :- இந்த ஊரிலே, பேயி, பிசாசு, நோவு, நொடி எது வந்தாலும் எங்கப்பனோட திருநீறு தான் மருந்து. மந்திரிச்சிக் குடுப்பாரு. ஏதோ மாசம்அஞ்சு பத்து கெடைக்கும். நீங்க மந்தரத்திலே மாங்கா உழுகாது, வைத்தியம் பாருங் கோன்னு சொல்லப்போயி, எல்லாரும் மருந்து சாப்பிட ஆரம்பிச்சிட்டாங்களாமே.

செல்ல :- நோய்க்கு மருந்து சொல்வது தவறு? இதுவா நான் செய்த குற்றம்?

(ஆத்திரத்தோடு வருகிருன் இருளன்.)

இருளன் :- (கடுமையாக) வாத்தியாரே!

செல்ல :- ஐயா!

இருளன் :- எம் பொழைப்பைக் கெடுத்திட்டியே!

செல்ல :- அந்த எண்ணம் அணுவளவும் எனக்கில்லையே ஐயா.

இருளன் :- (கோபத்தோடு) அடேய்! ஓம்படிச்ச புத்தியை-பகுத்தறிவை-எங்கிட்டே வச்சுக்காதே! வந்த புதுசிலியே பிளேக்கு, அம்மையெல்லாம் தொத்து நோயின்னு பிரசங்கம் பண்ணுனே! அப்பவே எனக்கு சுருக்குன்னு தாம் பட்டுது.

செல்ல :- அது ஆராய்ந்து கண்ட முடிவு. மெய்யான செய்தியாயிற்றே!

இருளன் :- எந்தக் குருடண்டா சொன்னவன்? பாவி! ஓங்காளியும் மகமாயும் தொத்து நோயா? அதைக கொண்டாட்றதா தப்பு? ஓம் பல்லைப் புடுங்கினாலும் பாவமில்லியே படுபாவி!

செல்ல :- ஐயா! மரியாதைக் குறைவாகப் பேச வேண்டாம்.

இருளன் :- பிச்சைக்காரப் பயலே! ஒனக்காடா மரியாதை வேணும்? என் ஊட்லே இருந்துகிட்டே எம்பொழைப்பைக் கெடுத்த துரோகி! இப்பவே தாண்டு வெளியே. இனிமே ஒரு விநாடிகூட இங்கே இருக்கப்படாது!

செல்ல :- நல்லது. அப்படியே செய்கிறேன்.

(தன் சாமான்களை யெல்லாம் எடுத்து வைக்கிறான் செல்லத்துரை.)

## ஏழாம் காட்சி.

[ஏரிக்கரை. அறுத்த புல்லும், அரிவாளும் கிடக்கின்றன. சடைச்சியும் மின்னொளியும் நின்று பேசிக்கொண்டிருக்கின்றனர்.]

மின்னொளி :- இந்த அற்ப விஷயத்துக்காகவா அவ்வளவு கோபித்துக்கொண்டார்? வாத்தியார் சொன்னதில் என்ன தவறு?

சடை :- நமக்குத் தெரியலே. அவருக்கு? வருமானம் போச்சேன்கிறாரு. (பரிவோடு) அம்மா! அவரைத் திட்னபோது, எம்மனசு என்னபாடு பட்டுது தெரியுமா?

மின்னொளி :- நீ தடுக்கவில்லையா?

சடை :- தடுத்திருந்தா எந்தோலை உரிச்சிருப்பாரே! எங்கப்பன் சங்கதி ஒங்களுக்குத் தெரியாது?

மின்னொளி :- (வருந்தி) சடைச்சி! அவர் நிலையை நினைத்தால் என் மனம் மிக வருந்துகிறது. இருளடைந்துகிடக்கும் கிராமத்தில் அறிவொளி பரப்புவது குற்றமா? மூட நம்பிக்கைகளை முறியடித்து, நாகரிக வாழ்வுக்கு நம்மை இட்டுச் செல்பவருக்கா இவ்வளவு கஷ்டங்கள்?

சடை :- வயிரமுத்து, எங்கப்பனுக்கு நல்லா உருவேத்தியிருக்கிறான்!

மின்னொளி :- அந்த ஊர்சுத்தியால்தான் எங்கப்பாவின் ஆதரவை அவர் இழந்தார். இப்பொழுது உன் தந்தையிடமும் கோள் சொல்லிக் கலகம் மூட்டிவிட்டான். இந்தப் பட்டிக்காட்டில் இனி அவருக்குச் சாப்பிடவும் இருக்கவும்....

சடை :- கஷ்டந்தான். இருந்தாலும், எங்கப்பனுக்குத் தெரியாமலாவது அவருக்கு வேண்டிய சௌகரியத்தைச் செய்யணும். பாவம்! ரொம்ப நல்லவரும்மா!.... அதோ; அவரே வர்ரூரே!

(செல்லத்துரை வருகிறார்.)

மின்னொளி :- வாருங்கள். உங்களைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறோம்.

செல்ல :- இந்த ஏரிக்கரையில் நின்று கொண்டு, மீன் உற்பத்தி பற்றிப் பேசினாலும் பயன் உண்டு. என்னைப்பற்றிப் பேசுவதில் என்ன புண்ணியம்?

மின்னொளி :- பயனை எதிர்பார்த்து இதயத்தில் அன்பு மலர்வதில்லையே.

செல்ல :- அன்பு என்ற சொல்லுக்கு, இந்த ஊரில் கொடுமை என்பதுதான் சரியான பொருள்.

மின்னொளி :- வெறி நாயின் செயலுக்கு ஆடுகள் பொறுப்பல்லவே!

செல்ல :- பிறந்த இடத்துப் பாசம். இந்த மண் வாசம் எங்கே போகும்? பேசுகிறாய்!

மின்னொளி :- மத வெறியும், மடமையும் மண்டிக்கிடக்கும் இந்தப் பாழூரிலும், உங்களுக்காகக் கண்ணீர் சிந்த ஒருத்தி இருக்கிறாள் என்பதைமட்டும் மறந்துவிடாதீர்கள்.

சடை :- சரி, நீங்க பேசிகிட்டிருங்க, நாம் போயிட்டு வர்றேன்.

செல்ல :- எங்கே போகிறாய்? சடைச்சி! அப்பா பிறகு ஒன்றும் திட்டவில்லையே?

சடை :- அவுரு திட்டு கெடக்குதுங்க. ஒங்களை நெனைச்சாத்தான் எனக்கு வருத்தமாருக்குது.

செல்ல :- சடைச்சி! சாப்பாடு, படுக்கை எல்லாம் பள்ளிக்கூடத்திலேயேதான். சௌகரியமாக இருக்கிறது. கவலைப்படாதே. நீ நன்ருகப் படி.

சடை :- ஆகட்டும் வாத்தியாரே. நான் வர்றேன்.

(புல்லும் அரிவாளும் எடுக்கிருள்.)

மின்னெளி :- சடைச்சி! இங்கே நாம் சந்தித்ததை....

சடை :— யாருகிட்டேயும் சொல்லமாட்டேம்மா. எனக்குத் தெரியாதா என்ன, ஊரு நெலமை.

(போகிருள் சடைச்சி.)

செல்ல :- மின்னெளி! நானும் வருகிறேன்.

மின்னெளி :— (புன்சிரிப்போடு) ஏன்? ரொம்ப அவசரமா?

செல்ல :- அப்படியொன்றுமில்லை. நாம் தனித்திருப்பதை யாரேனும் பார்த்தால் ...

மின்னெளி :- துன்பம் இருவர்க்குந்தானே வரும்?

செல்ல :- மழை பொதுவாகப் பெய்தாலும், செந்நீரும் கருநீரும் ஆவதுண்டு நிலைப்பண்புக்கு ஏற்றபடி! நீ ஊர்த் தலைவர் மகள். நான் ஊருக்கிளைத்த உபாத்தியாயர். வேற்றுமையில்லை?

மின்னெளி :- இப்படியெல்லாம் சொல்லி என்னை ஏமாற்ற முடியாது. உரமான அன்புக்கு முன்னுல், ஏற்றத் தாழ்வு என்ன செய்யும்?

செல்ல :- உன் போன்ற அழகான கிளியை, வயிர முத்துப் போன்ற பூனையிடம் சேர்க்கும்!

மின்னொளி :- (வருந்தி) ஐயோ! அதைச் சொல்லத் தான் நினைத்தேன். என் மனம் வேகிறது. அவனை மணப்பதைவிட கல்லைக் கட்டிக் கொண்டு இந்த ஏரியில் விழுவதுமேல்.

செல்ல :- தற்கொலை பாபமாயிற்றே.

மின்னொளி :- அந்தக் குடிகாரனை மணப்பதைவிடவா?

செல்ல :- வேண்டாம் மின்னொளி! அப்பாவின் மனதை மாற்ற முயலு.

மின்னொளி :- நாய் வாலையாவது நிமிர்த்தலாம். அது முடியாது. அப்பாவின் பிடிவாதம் அவ்வளவு கோணலாயிற்றே!

செல்ல :- வேறு வழியில்லையா?

மின்னொளி :- எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்? நீங்கள்தான் சொல்லவேண்டும்.

செல்ல :- (வியந்து) நானா?

மின்னொளி :- ஆம். என் வாழ்வும் தாழ்வும், உங்கள் கையில் தானிருக்கின்றன.

செல்ல :- நான் ஏழை; தாங்கமாட்டேன் மின்னொளி!

மின்னொளி :- உங்கள் அன்பிலும் பலத்திலும், எனக்கு அசையாத நம்பிக்கையுண்டு.

(தொலைவில் ஓர் எருமைக்கன்றோடு நான்கு பேர் தோன்றுகின்றனர்.)

செல்ல :- (அச்சத்தோடு) அதோ! யாரோ நம்மை நோக்கி.... பார்த்தாயா?........

மின்னொளி :- பயப்படாதீர்கள். நமது பண்ணையாட்கள். நாளை மறுநாள் ஓங்காளிக்குப் பலிபூசைக்காக எருமைக்கடா கொண்டுபோகிறார்கள்.

**செல்ல :-** ஃகும்....என்று ஒழியுமோ இந்தக் காட்டு மிராண்டித்தனம்?

**மின்னொளி :-** (ஆசையோடு) நாம் ஒன்று சேர்ந்த பிறகு.

**செல்ல :-** மின்னொளி! நிறைவேறுவது கடினம். நீ பகற்கனவு காண்கிறாய். நான் வருகிறேன்.

(செல்லத்துரை போகிறார்.)

**மின்னொளி :-** என்ன..? காதல் ஒரு கனவா....?

(பெருமூச்சு விடுகிறாள் மின்னொளி.)

## எட்டாம் காட்சி.

[**பொன்னப்பர் வீடு.** அரசாங்க சேவகன் அவரிடம் உத்தரவொன்றைக் கொடுத்து, கையெழுத்துப் பெற்றுச் செல்கிறான். உள்ளே வந்த இருளன் பூசாரி அதைப் பார்க்கிறான்.]

**இருளன் :-** எசமான்! அது யாருங்க? கோர்ட்டு சேவகனாட்டம் இருக்குது?

**பொன் :-** ஆமா. ஜில்லா கலெக்டர்கிட்டேருந்து ஒரு அவசர உத்தரவு.

(வயிரமுத்து வருகிறான்.)

**இருளன் :-** என்னாங்க? இந்த நோம்பி நொடியிலே கூட?

**பொன் :-** காளிக்கு ஆடு, கோழி, எருமை, எதும் பலியிடக்கூடாதாம். மொரட்டுத்தனமா ஒடம்பிலே ஊசி குத்திகிட்டு ஆடக்கூடாதாம். தடையுத்தரவு.

**இருளன் :-** ஐயோ! இதென்ன விபரீதமா இருக்குது,

பரம்பரையா செஞ்சிவர்ற திருவிழா வாச்சே! நிறுத்தக்கூடாதே. காளியோட கோவம் ஊரையே எரிச்சிடுமே!

**பொன் :-** அதுதான் நானும் யோசிக்கிறேன். இது மாதிரி தடையுத்தரவு இத்தனை நாளா நம்ம ஊருக்கு வந்ததேயில்லியே.

**வயிர :-** மாமா! இதுக்கெல்லாம் யாரு காரணம் தெரியுமா?

**பொன் :-** யாருப்பா?

**வயிர :-** அந்த வாத்தியாருப்பய செல்லத்துரை தான். இதெல்லாம் அநாகரிகம்; தடுக்கணும்னு மேலே விண்ணப்பம் போட்டிருப்பான். வந்துடிச்சி உத்தரவு.

**இருளன் :-** உம்....இருக்கும் இருக்கும். நம்ம ஊருக்கே விநாசகாலமால்ல வந்து சேந்திருக்கிறான். அயோக்கியப் பய! எசமாங்க இதையெல்லாம் கவனிக்கணும். காளியாயி........

**வயிர :-** அவனை ஊருக்குள்ளே வச்சிருக்கறவரைக்கும், என்னென்ன விபரீதமெல்லாம் வருமோ! ஒரு வார்த்தை சொல்லுங்க மாமா! நான் பார்த்துக்கிறேன்.

**இருளன் :-** ஆமாங்க எசமான், இதைச் சும்மா உடப்படாது. பலிபூசை இல்லேன்னா ஊருக்கே அழிவுதான்! ஒரு பயலுக்காக ஊரே நாசமாப் போறதா? காளியாயி.......

**பொன் :-** பொறுங்க. நானே அவனைக் கூப்பிட்டு விசாரிக்கிறேன். இப்ப, எது எப்படி இருந்தா

லும், நாம்ப அரசாங்க உத்தரவை மீறக்கூடாது.

இருளன் :- அப்படியானு பண்டிகை?

பொன் :- நிறுத்துவமா! சக்கரைப் பொங்கலோட வாவது சரிப்படுத்த வேண்டியதுதான்.

இருளன் :- (கைகளைப் பிசைந்து) ஐயோ! காளியாயி.... நாங்க என்னம்மா குத்தம் பண்ணிேனும்?

வயிர :- பூசாரி! பொலம்பாதே. என்ன செய்யறது!

## ஒன்பதாம் காட்சி.

(இருளன் வீடு. புத்தகம் படித்துக்கொண்டிருக்கிருள் சடைச்சி. இருளன் வருகிருன். துணியில் கட்டி வந்த பழம் தேங்காய் பிரசாதங்களைச் சலிப்போடு கட்டில் மேல் போடுகிருன்.)

சடை :- அப்பா! ஊரிலே எங்கே பார்த்தாலும் அம்மை வாக்கருப்லே இருக்குதே!

இருளன் :- அதை ஏங் கேக்கறெ போ.......

சடை :- மணியக்காரர் மக, மின்னெனிக்கிக்கூட வாத்திருக்குதாமே?

இருளன் :- ஏன் வாக்காது? அம்மை மாத்திரமா வாக்கும்? வாந்திபேதிகூட வந்து வாரிகிட்டுப் போவும்.

சடை :- ஏம்ப்பா அப்படிச் சொல்றே?

இருளன் :- ஆயாளோட பலிபூசை நின்னுது; வந்தது ஊருக்கே அனர்த்தம்! தெரியாமையா பெரிய வங்க பரம்பரையா பண்ணிகிட்டு வந்தாங்க?

சடை :- கடவுள் கருணையே உருவானவர்னு சொல்வாங்களே. ஓங்காளி அவ்வளவு கொடுமைக்காரியா அப்பா, ஊரையே கெடுக்க?

இருளன் :- ஏது? ஒங்கிட்டேயும் வாத்தியாரு வாசம் அடிக்கிறாப்லே இருக்குதே! இதெல்லாம் ஒனக்கென்னதெரியும்? போய் ஒன் வேலையைப்பார்.

(சடைச்சி போக, வயிரமுத்து வருகிறான்.)

வயிர :- ரொம்ப கோவம் போலேருக்குது பூசாரிக்கு! யாருமேலே?

இருளன் :- அதை ஏங் கேக்கறே போ. அந்த வாத்தியாரு வந்தாலும் வந்தான், ஊரையே கெடுத்திட்டான். நம்ம வரும்படியிலும் மண்ணு உழுந்துது. வர்ற கோவத்துக்கு, அவனை என்ன பண்ணனுந் தெரியுமா?

வயிர :- எனக்கும் அப்படித்தான் இருக்குது. யாரை மிச்சத்திலே உட்டான்? பூசாரி! ஒரு வேலை செய்வோமா?

இருளன் :- என்ன?

வயிர :- (மெதுவாக) நீ பக்கபலமா இருக்கறதானா, அவனை ஒழிச்சே கட்டிட்றேன். என்ன சொல்றே?

இருளன் :- வழி ?

வயிர :- எல்லாம் இருக்குது. நான் செய்யறேன்.

இருளன் :- செய்யப்பா! ஊரைப் புடிச்ச சனியனு வது ஒழியட்டும்.

(அடுத்த அறையில் பாத்திரம் விழுகிற சப்தம்)

இருளன் :- (அஞ்சி) யாரங்கே? சடைச்சி!

சடை :- ஏம்பா?

இருளன் :- நீ இங்கேதான் இருக்கிறியா?

சடை :- சொம்பு எடுத்தேம்பா, தவறி உழுந்துடிச்சி.

இருளன் :- சரி சரி! பீடை. வயிரமுத்து! சொன்னதைத் தவறாமெ செய்யி. நம்ம காளி சத்தியுள்ள தெய்வம். ஒன் இஷ்டமெல்லாம் நெறை வேறும். காளி கருணை செய்யட்டும்!

(ஆசீர்வதிக்கிருன்.)

## பத்தாம் காட்சி.

[பொன்னப்பர் வீடு. அம்மை வார்த்துத் துரும்பென இளைத்துப் படுக்கையில் கிடக்கிருள் மின்னெளி. அருகே கவலையில் தோய்ந்த பொன்னப்பர்]

மின்னெளி :- (இருமி, ஈன சுரத்தில்) அப்பா....எனக்கு....

பொன் :- என்னம்மா வேணும்? ஒடம்புக்கு எப்படியிருக்குது? காபி குடிக்கறையா?

மின்னெளி :- வேண்டாம்.

பொன் :- பின்னே என்னம்மா வேணும்? பயப்டாமெ சொல்லு கண்ணு.

மின்னெளி :- (இருமி) உம்....அப்பா! தயவு செய்து கொஞ்சம் விஷம் கொடுங்கள். மரணத்திலாவது நான் சாந்தியைப் பெறுகிறேன்.

பொன் :- (பரிவோடு) மின்னெளி! ஏம்மா இப்படிப்

பேசறே? ஒனக்கு அப்படியொண்ணும் வந்துட லேம்மா. கவலைப்படாதே.

**மின்னொளி :-** உம்...எனக்கு எல்லாம் வந்தாயிற்று. இன்னும் என்ன இருக்கிறது? விருப்பமற்றவனை மணக்க வேண்டுமென்பதை எண்ணி எண்ணி நெஞ்சம் உடைந்தது. உடலழகு மட்டும் எதற்கென்று அம்மை வந்து அதையும் குலைத்துவிட்டது! பச்சை மரம் போலிருந்த மேனி, தீய்ந்து கரிக்கட்டையாகி விட்டதே. எலும்பும் தோலுமான இந்தக் கோலத்தில் நான் வாழவேண்டுமா உலகில்? அப்பா!....

**பொன் :-** நம்மால் ஆவது என்னம்மா இருக்கிறது? அவனன்றி அணுவும் அசையாது. எல்லாம் வினைப்பயன்.

(ஒரு வேலையாள் ஓடிவருகிறான் வேகமாக)

**ஆள் :-** எசமான்! எசமான்! பள்ளிக்கூடம் பத்தி எரிஞ்சி போச்சுங்க.

**பொன் :-** (பதறி) அடடே! ஏண்டா? எப்போ?

**ஆள் :-** இப்பத்தானுங்க. வாத்தியாரு உள்ளே இருக்காரு, கதவைத் தாழ்போட்டு நெருப்பு வச்சிருக்கானுங்க.

**மின்னொளி :-** (அச்சமும் ஆவலுமாய் எழுந்து உட்கார்ந்து) ஆ! அவர்....உள்ளே சிக்கி எரிந்துபோய்விட்டாரா?

**ஆள் :-** வெளியே போயிருந்திருக்கிறாரும்மா. அவருக்கொண்ணும் ஆபத்தில்லே. உள்ளேபோன

சடைச்சிக்குத்தான் பாவம், ஒரு காலு வெந்து கருகிப்போச்சு.

மின்னொளி :- சடைச்சிக்கா? ஐயோ!.... தங்கமான பெண்ணாயிற்றே! அவளுக்கா?....

பொன் :- யாரு செஞ்ச அயோக்யத்தனம்டா இது? எங்கட்டிடமா எரிஞ்சிது? என்னடா அநியாயம்? கேள்வி முறை இல்லியா?

ஆள் :- ஆருக்கு தெரியுங்க செஞ்சது யாருன்னு?

பொன் :- (வருந்தி) நானூறு செலவு பண்ணிக் கட்டி முடிச்சேன். வருஷங்கூட ஆவுலே, இந்த கதியா வரணும்? காளி! ஒன்னை மலையா நம்பி யிருந்தேனே! சொத்தெல்லாம் போயி, கடன் தொல்லை மென்னியைப் பிடிக்கற வேளையிலே கஷ்டத்துக்குமேலே கஷ்டமா?

(தலையைப் பிடித்துக்கொண்டு உட்காருகிறார்.)

## பதினோராம் காட்சி.

[இருளன் பூசாரி வீடு. "ஐயோ, அப்பா" என்று முறுகிக் கொண்டு படுக்கையில் கிடக்கிறாள் சடைச்சி. இருளனும், வயிரமுத்தும் அவளது வெந்த காலில் கட்டுப் போட்டு முடிக்கின்றனர்.]

வயிர :- இப்படி நடக்கும்னு நான் நெனைக்கவே யில்லே. புலி மேலே வீசின கத்தி, புள்ளிமானை யல்ல காலை வெட்டிபிட்டுது.

இருளன் :- (வெறுப்போடு) எனக்கு நல்லா வேணும். வயிரமுத்து! கெடுவான் கேடு நினைப்பான்கிறது சரியா நடந்திட்டுது.

வயிர :- அதென்னமோ. எம்மேலே பெசகில்லே.

இருளன் :- பெசகு இல்லியா? நீ ஒரு கொலைகாரன்!

வயிர :- நீ மாத்திரம் யாரு? எங்கூட்டாளிதான்.

இருளன் :- அடேய்! நாம்பெத்த மகளை, மொடமா பண்ணினியேடா பாவி! நானு கொலைகாரன்?

வயிர :- எரியற கொள்ளிக்கு நீ எண்ணை! ஒன் வயித்துப்பாட்டைக் கெடுத்தான்னு ஒனக்குக் கோவம், ஏங் கல்யாணத்தைக் கெடுக்கறான்னு எனக்கு ஆத்திரம். ரெண்டும் ஒண்ணுசேந்துது. இப்பத்தான் என்ன? செஞ்சதிலே ஒண்ணும் தவறில்லியே! நாமொண்ணு நெனைக்க தெய்வம் ஒண்ணு நெனைச்சிட்டுது.

இருளன் :- படுபாவி! தெய்வத்தோட பெயரைச் சொல்ல ஒனக்கேதுடா யோக்யதை?

வயிர :- ஒனக்கு மாத்திரம் யோக்யதை ரொம்ப உண்டாக்கும்?

இருளன் :- எங் குடியைக் கெடுத்த நாடோடிப் பயலே! கழுத்தைத் திருவி ரெத்தத்தைக் குடிச்சிடுவேன். ஜாக்கிரதை!

வயிர :- முறுக்காதே பூசாரி! இது ஆட்டுக்குட்டியில்லே, அசல் புலிக்குட்டி! நான் யாரோட மருமகன் தெரியுமா?

இருளன் :- எல்லாந் தெரியும். நீ ஒரு ஊர் சுத்தி, அயோக்யன், திருடன், இறக்கமில்லாத பாவிங் கறதும் தெரியும். நீ மாத்திரம் இனிமே இந்த ஊர்லே இரு; பழிக்குப்பழி வாங்காமெப்போனா, எம் பேரு இருளம் பூசாரியில்லே!

வயிர :- ரொம்ப சரி, மாத்தி வச்சுக்கோ. யாரு வேண்டான்னுங்க? சும்மா உடுப்பா, பனங் காட்டு நரி சல சலப்புக்கு அஞ்சாது!

(போகிறான் வயிரமுத்து.)

இருளன் :- (ஆத்திரத்தோடு) அடேய்! எங்கே பேசி கிட்டே போறே? நில்லுடா.

சடை :- (மெலிந்த குரலில்) அப்பா!....

இருளன் :- ஏம்மா?

சடை :- சேத்துலே கல்லைப்போட்டா மொகத்திலெ தானே தெரிக்கும்! வேணும்ப்பா....

இருளன் :- எங்கண்ணு! ஆதியிலேருந்து ஒம்புத் தியைக் கேட்டாவது நடந்துகிட்டேனு? நான் பெரிய மடையன்!

(செல்லத்துரை வருகிறான் வேகமாக.)

செல்ல :- (ஆவலோடு) சடைச்சி! சடைச்சிக்கு என்ன நேர்ந்தது?

சடை :- (சோகத்தோடு) வாத்தியாரண்ணே! என் காலு....

செல்ல :- (பதறி) ஆ! நீயேன் இக்கதிக்கு ஆளாக வேண்டும்? எதற்கு வந்தாய் பள்ளிக்கூடத் திற்கு? ஐயோ? இறக்கை ஒடிந்த வானம்பாடி யாகிவிட்டாயே!

இருளன் :- (வருந்தி) வாத்தியாரே! வயிரமுத்து பேச்சைக்கேட்டு நான் மோசம் போயிட்டேன். என்னை மன்னிக்கணும். என் வினையே என் மகளைச் சுட்டது.

செல்ல :- எப்படி ஐயா? சொல்லுங்கள்.

**இருளன் :-** பள்ளிக்கூடத்தோட ஒங்களைப் பொசுக்க ஏற்பாடு பண்ணினேம், நானும் வயிரமுத்தும். நாங்க பண்ணின சதியிலேருந்து ஒங்களைக் காப்பாத்த பள்ளிக்கூடம் வந்திருக்கிற சடைச்சி. அப்ப நீங்க இல்லே. கதவைச் சாத்தி நெருப்பை வச்சிட்டான் வயிரமுத்து.

**செல்ல :-** ஆ! என்ன பயங்கரமான சதி. நான் செய்த தவறென்ன? நான் அவ்வளவு கொடியவனா? அழிக்கப்படவேண்டியவனா? என்னைக் கொல்லவும் துணிந்தீர்களா?

**இருளன் :-** தப்பு. அதனாலெதான் அதுக்கேத்த தண்டனையை காளியே எனக்குக் குடுத்துட்டா. ஒங்க கிட்டேதான் நியாயம் இருக்குதுன்னு கண்ணுக்கு மெய்யா தெரிஞ்சிகிட்டேன். நான் ரொம்ப கேட்டுக்கிறேன், நடந்ததையெல்லாம் மறந்துடுங்க. வாத்தியாரே! இனிமே ஒங்க சொல்லைத் தட்டவேமாட்டேன். நீங்கதான் எனக்குத் தெய்வம்.

**செல்ல :-** ஆஹா! "சீர்திருத்தம் ஒரு நெருப்பு விளையாட்டு" என்பது மெய்யாகிவிட்டதே!

(சடைச்சியின் காலைப் பார்க்கிறான்.)

## பனிரெண்டாம் காட்சி.

[**பொன்னப்பர் வீடு.** படுக்கையில் மின்னொளி. அருகே சோர்வுடன் வீற்றிருக்கிறார் பொன்னப்பர். வயிரமுத்து வருகிறான்.]

**வயிர :-** (மிடுக்காக) மாமா! இவுரு வெளியூர் பயணம்.

**பொன் :-** ஏம்பா?

வயிர :- இந்த ஊரே எனக்குப் பிடிக்கலே.

பொன் :- நாங்களெல்லாம் இருக்கிறமே?....

வயிர :- நீங்க இருக்கிறீங்க; எச்செலையும் காக்கா யும் மாதிரி! இங்கே என்னருக்குது? ஒரு ரயிலா, மோட்டாரா, பணமா, காசா, தொழிலா தொம் பாரமா? சிங்கப்பூருக்கு போறதுன்னு முடிவு பண்ணிட்டேன்.

பொன் :- சிங்கப்பூருக்கா? எதுக்கு?

வயிர :- என்னமாவது தொழில் பண்ணிகிட்டு, அங் கேயே ஜாலியா இருந்திடப் போறேன்.

பொன் :- (வியந்து) என்னப்பாது? ஒனக்கு ஆக வேண்டிய காரியம் எவ்வளவோ இருக்குது. இப் படிச் சொல்றியே, ஊம்....?

வயிர :- என்ன காரியம்? கல்யாணந்தானே?

பொன் :- ஆமாப்பா! அடுத்த மாசம் நல்ல முகூர்த் தம் வருது. நீயென்னடான்னு....

வயிர :- வந்தென்ன பண்றது? நாங் கலயாணம பண்ணிக்கப்போறதில்லே. பண்ணிகிட்டாலும், கண்டிப்பா மின்னொளியை பண்ணிக்கப் போற தே இல்லே.

பொன் :- ஏம்ப்பா? காரணம்? மின்னொளிக்குப் புரு ஷன் நீ தாங்கறது முடிஞ்சுபோன விஷய மாச்சே!... இனிமே மாத்தமுடியுமா?

வயிர :- நானும் அப்படித்தான் நெனைச்சி, ஆசை யா இருந்தேன். பொண்ணும் நல்ல அழகான பொண்ணு, சொத்து சொதந்திரத்தோட

கெடைக்கும்னு! இப்பத்தான் ரெண்டும் இல்லியே. இனிமே கரும்பை நெனச்சுகிட்டு சங்கையை மென்னுத்தான்.

பொன் :- (அஞ்சி) வயிரமுத்து! என்னப்பா சொல்றே நீ? மின்னொளிக்கு என்ன குறை?

வயிர :- அம்மை வாத்து இவளோட அழகெல்லாம் அள்ளிகிட்டுப் போயிடிச்சி. கடன் வந்து ஒங்க சொத்தெல்லாம் சொழட்டிப் புடிக்குது! நான் எதுக்காக இவளைக் கட்டிக்கணும்? எனக்கு என்ன சுகங் கெடைக்கும்? சொல்லுங்களே!

பொன் :- வயிரமுத்து! நல்லா யோசனை பண்ணித்தான் சொல்றியா? நம்ம ஒறவு? எந்தங்கச்சிக்கு நான் செஞ்சிகுடுத்த சத்தியம் என்ன ஆவறது?

வயிர :- (அலட்சியமாக) பெரிய சத்தியம்! போய்யா? நான் ஒன்னும் ஏமாந்தவனில்லே. பொன்னப்பர் மகளை, இந்த சின்னப்பர் இனி என்னைக்கும் கல்யாணம் பண்ணிக்கவேமாட்டார்.

பொன் :- (வருந்தி) வயிரமுத்து! நீயா இப்படிப் பேசறே? இது நெசந்தானா?

வயிர :- கலப்பில்லாத நெசம். பேசறது நானேதான். எம் மனசை யாராலியும் மாத்தமுடியாது தெரியுமில்லே? நான் வர்றேன்.

(மிடுக்காகப் போகிறான்.)

பொன் :- வயிரமுத்து....! வயிரமுத்து....! ஆஃகா!.... போய்விட்டானே! இடிந்தது என் மனக் கோட்டை. ஒழிந்தது என் கௌரவம். ஐயோ! நான் என்ன செய்வேன்!

**மின்னொளி :-** (பரிதாபமாக) அப்பா !.... நீங்கள் ஏன் வீணாக வருந்தவேண்டும்?

**பொன் :-** மகளே! சத்தியத்தைத் தவிடுபொடியாக்கி விட்டானே வயிரமுத்து. அடுக்குமா இது? ஐயோ! என் ஆசையிலும், என் வாழ்க்கையிலும், மண்ணைப்போட்டானே பாவி!

**மின்னொளி :-** அப்பா !... நான் இறப்பது ஒன்று தான் இதற்குப் பரிகாரம்! என்னால்தானே இவ்வளவும்....?

(இருளனும் செல்லத்துரையும் வருகின்றனர்.)

**இருளன் :-** என்ன எசமான் ஒரு மாதிரியா இருக்கிறீங்க? என்ன மனவருத்தம்?

**பொன் :-** (நெஞ்சம் குமுறி) பூசாரி! நான் என்னென்னு சொல்லட்டும். காளி முன்னாலே செஞ்ச சத்தியம். அதைக் கால்லே மெதிச்சி, எம் மொகத்திலே கரியைப் பூசிட்டுப் போயிட்டான் வயிரமுத்து! அவன் மின்னொளியை மணந்துகொள்ள மாட்டானாம்.

**இருளன் :-** அப்படியா? ஏன்?

**பொன் :-** அம்மைவாத்து எம் மகளோட அழகு கொலைஞ்சி போச்சாம். நானும் கடன்காரனாயிட்டேனாம். எங்களாலெ சொகமில்லையாம்! பூசாரி! இது என்ன அநியாயம்..!

**இருளன் :-** அயோக்கியத்தனம்னு சொல்லுங்க!

**பொன் :-** கடன்காரன் மகள். கௌரவம் கொலைஞ்சுது. பொன்னாக மின்னியவள், செல்லாக் காசு, செம்பு பித்தளையாகிவிட்டாள்! ஊரறிந்த சத்தியம். யாரு கட்டுவாங்க என் மகளை? ஐயோ!

இனி இவளோட வாழ்வு, ஆற்றில் கவிழ்ந்த படகுதானா?

செல்ல :- இல்லை. இப்பொழுதும் வழி இருக்கிறது. மன்னிக்கவேண்டும் தாங்கள் ஒப்பினால், கரை சேர்க்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

பொன் :- நீங்க சொல்றது...? வெளங்கலியே!

செல்ல :- ஐயா! வாடிப்போயிற்று என்று நீங்கள் நினைக்கும் இந்த வண்ணமலரை, நான் சூடிக் கொள்கிறேன் சென்னியில்!

இருளன் :- எசமான் நீங்க பாக்கியம் செஞ்சவங்க! மனம்போல மாங்கல்யம் சரீன்னு சொல்லுங்க.

பொன் :- (திகைத்து) மின்னொளி! எனக்கு என்ன சொல்றதின்னே தெரியலியே!

மின்னொளி :- (எழுந்து உட்கார்ந்து) அப்பா! என் வேண்டுகோள் ஒன்று. மறுக்கமாட்டீர்களே?

பொன் :- இனிமே, மறுக்கவே மாட்டேம்மா.

மின்னொளி :- என்னை முன்னரே இவருக்குக் கொடுத்துவிட்டேன் நான். கருணை கூர்ந்து மணந்து கொள்ள அனுமதியுங்கள்.

(எழுந்து வணங்குகிறாள்.)

பொன் :- (வாரியெடுத்து தழுதழுத்த குரலில்) கண்ணே! உன் மனம்போல் ஆகட்டும் எப்படியாவது நீ நல்லா இருந்தாப் போதும்.

மின்னொளி :- அப்பா! கல்வியால் கனிந்து, கொள்கையால் விரிந்த உள்ளத்தில்தான். மனிதாபிமா

ணம் இருக்கும் என்பதை, இப்போதாவது ஒப்புக்கொள்கிறீர்களா?

பொன் :- மகளே! படிப்பின் பெருமையறியாத பாவி நான் செல்லத்துரை! என்மேல் ஏதாவது தவறு இருந்தாலும்....

செல்ல :- சென்றதை மறந்துவிடுங்கள். இனி நாமெல்லோரும் சேர்ந்து, இந்தக் கிராம முன்னேற்றத்தில் ஈடுபடுவோம். நகரத்திலுள்ள வசதிகளை, முற்போக்குச் சாதனங்களை நம் மக்களும் பெறச் செய்வோம். குருட்டு நம்பிக்கைகளை விரட்டியடிப்போம். கல்வி, சுகாதாரம், விவசாயம், வளர்வதற்குத் திட்டமிட்டு வேலை செய்வோம். இதற்கெல்லாம், மின்னொளி எனக்கு வழிகாட்டி நலம் பயக்கும் வான் பொருள்!

மின்னொளி :- (நாணத்தோடு) வெறும் மின்னல் நான், எனக்கு ஒளி அவ்விடம்தானிருக்கிறது!

பொன் :- எல்லாம் காளியின் கருணை.

இருளன் :- இல்லே எசமான்! அதுதான் தப்பு. நாம்ப என்ன பண்ணியும், காளியோட கருணைக்குப் பாத்திரமானவங்க நாப்பல்ல எசமான்; வாத்தியாருதான்! இவுரு சொல்றதும், செய்யறதுந் தானே காளிக்குச் சம்மதமா இருக்குது!

பொன் :- பூசாரி! எனக்குப் பரமசந்தோஷம். மின்னொளியால் இந்த ஊருக்கே விமோசனம் கிடைக்கட்டும். எனக்கும் பெருமை.

(வேலையாள் ஓடிவருகிறான்.)

ஆள் :- (பதறி) எசமான்! எசமான்! எசமான்!!

பொன் :- (வியந்து) ஏண்டா? என்ன சங்கதி?

ஆள் :- நம்ம வயிரமுத்து சாராயங் குடிச்சிருந்தாராம், பள்ளிக்கூடத்துக்கு நெருப்பு வச்சதும் அவருதானும்! ஏரிக்கரைத் தோப்பிலே காசாட்டம் ஆடிக்கிட்டிருந்தாராம். மதுவிலக்குப் போலீசாரு வந்தவங்க, புடிச்சிகிட்டுப் போறாங்க எசமான்! எசமான்....!

பொன் :- (வியந்து) என்ன? நெசம்தானா? வயிரமுத்தா? அவனா பள்ளிக்கூடத்துக்கு நெருப்பு வச்சான்? என் தங்கச்சி மகனா...? அடப்பாவி! போலீசா புடிச்சிகிட்டுபோவுது? அட கடவுளே!

மின்னொளி :- (புன்னகையோடு) அதற்கு நாமென்னப்பா செய்வது? எல்லாம் வினைப்பயன்....! "எனைப்பகை யுற்றாரும் உய்வர், வினைப்பகை வீயாது பின்சென்று அடும்" என்று தெரியாமலா சொன்னார் திருவள்ளுவர்?

செல்ல :- மின்னொளி! பெயர்மட்டுமல்ல, உன் சொற்களும் மின்னொளியே....!

— திரை —






ஆசிரியர்:

ப. கண்ணன்.

★

கட்டுரை, கதை, கவிதை
வரலாறு, பொன்மொழிக
யாவும் நிறைந்த

அறிவியல் திங்கள் வெளியீடு.

| | |
|---|---|
| தனிப்படி. | 0—3— |
| ஆண்டுக்கு | 2—4— |

★

பகுத்தறிவு அலுவலகப்

சலகண்டபுரம் :: சேலம் மாவட்